

# பொம்மலாட்டம்

''உங்கள் வயது என்ன?'' என்றார், அந்த அதிகாரி.

ராம்சிங் தாதா அவரை நிமிர்ந்து பார்த்தான். உச்சி வெயிலில் அவருடைய வெள்ளைச் சராயும் சட்டையும் கண்ணைக் கூசின. அவன் பேசாமல் தலையைக் குனிந்து கையிலிருந்த ராணி பொம்மையின் பாவாடைக் கொசுவத்தை நீவி விட்டான்.

இப்போது அவர்களைச் சுற்றியிருந்த கும்பலில் ஒரு இளைஞன் ராம்சிங்தாதாவுக்கு காது கேட்கவில்லையோ அல்லது கேட்டது விளங்கவில்லையோ என்கிற அனுமானத்துடன், ''தாதா, உங்களுக்கு வயது என்ன ஆகுதுன்னு கேட்கிறாங்க!'' என்றான்.

''புரியுது புரியுது'' என்றான் ராம்சிங் சுவாரஸ்யமில்லாமல். ''யாருக்குத் தெரியும் வயசு?''

'சுமாரா எத்தனை இருக்கும் சொல்லு' என்றது வெள்ளைச் சராய்.

'ஐம்பதிருக்கும்.' அவனுடைய முகத்தில் மேலும் கீழுமாக ஓடிய கோடுகளை யோசனையுடன் பார்த்தபடி ''ஐம்பது தானா?'' என்றார் அதிகாரி.

''சரி அறுபது,'' என்றான் அவன் சமாதானமாக.

அதிகாரியுடன் கூட நின்றிருந்தவர்கள் சிரித்தார்கள்.

அவனும் அவர்களுடன் சேர்ந்து சிரித்தான்.

''நான் படிப்பெழுத்தறிவில்லாதவன் சாப், வயசப் பத்தி எனக்கென்ன தெரியும்?''

''சரி போகட்டும், இதுயார், உன் மனைவியா?''

''ஆமாம் சாப்.''

தலையைப் போர்த்தியிருந்த தலைப்பில் மீராவுடைய முகம் முக்கால் பாகம் பதுங்கியிருந்தது.

''இதைத் தவிர ஏதாவது தொழில் செய்கிறாயா?''

''இல்லை சாப். இதைத் தவிர ஒரு தொழிலும் தெரியாது.''

''குடும்பத் தொழிலா இது?''

அவன் ஆமாம் என்பது போல் தலையை அசைத்தான்.

''முப்பாட்டன் காலத்திலேந்து இதுதான்.''

''ராஜசமஸ்தானத்தில் இருந்தவர் இவருடைய முப்பாட்டன்'' என்றான் ஒருத்தன் யாரும் கேட்காமலே. அந்தப் பெருமையெல்லாம் எதுக்கு இப்ப என்று நினைத்தபடி அவன் அருகிலிருந்த தகரப் பெட்டியில் பொம்மைகளை அடுக்க ஆரம்பித்தான்.

''உன் வீடு எங்கே?''

''அதோ அதுதான்'' என்று சில இளைஞர்கள் அவனுடைய குடிசையை உற்சாகமாகக் காண்பித்தார்கள்.

அதிகாரிகள் தங்களுக்குள் ஏதோ புரியாத பாஷையில் பேசிக் கொண்டார்கள். குறிப்பெடுத்துக் கொண்டார்கள். ஜீப்பில் ஏறிக் கொண்டு கிளம்பிப் போனார்கள்.

''யார் இவர்கள்?'' என்றாள் மீரா.

''யாருக்குத் தெரியும்?'' என்றான் அவன் பெட்டியை மூடியபடி.

இந்த பொம்மைகளுடன் அவனுடைய வாழ்வு எத்தனை ஐக்கியமாகி இருக்கிறதோ அந்த அளவுக்கு அவளுடையதும் ஐக்கியம். அவன் இருந்த அடுத்த கிராமம் அவளுடையது. அங்கு ஏதோ திருவிழா என்று அவன் தன் பொம்மலாட்டத்தை அரங்கேற்றச் சென்றிருந்தான். அப்பா இறந்த புதுசு. அதனால் எப்பவுமே கூடவே வந்து டோலக் தட்டிப்பாடும் அம்மா அவனுடன் இல்லை. அவனே பாட்டும் பாடி, அரங்கை அமைத்து, திரையை விலக்கி, பொம்மை களை ஆட்டுவித்து, சூத்ரதாரியாய், ராமனாய், சீதையாய், ராவணனாய் குரலை மாற்றி மாற்றிப் பேசிப் பாடும் விந்தையைக் கூட்டத்துக்கு முன் வரிசையில் வாயைப் பிளந்து கண்ணை விரித்துப் பார்த்த பெண்ணை முதல்நாளே அவன் கவனித்து விட்டான்.

வெளுப்பாக புறாப்போல, சின்ன உருவமாய் இருந்தாள். அவனது பாட்டையும் ஆட்டத்தையும் மெய்மறந்து அவள் ரசித்தது அவனுக்குப் பெருமிதமாக இருந்தது. அவள் மேல் காதல் சுரந்தது. அடுத்த பத்தே நாட்களில் இருவருக்கும் திருமணம் நடந்தது. அன்றிலிருந்து இன்றுவரை மீரா அவனுடைய ரசிகை, தோழி. 'கேளுங்கள் கேளுங்கள் ராம கதை' என்று அவன் ஆரம்பித்தால், டோலக்கை ஒரு தட்டு தட்டி, 'கேளுங்கள் கேளுங்கள் சீதா பிராட்டியின் சோகக் கதை' என்று தொடர்வாள்.

இந்த அவளது ரசனைதான் அவனைத் தாங்குகிறது என்று அவன் நினைத்துக் கொண்டான். இல்லாவிட்டால் எந்தப் பெண் இந்த தரித்திரத்தில் சிரித்துக் கொண்டு முணு முணுக்காமல் இருப்பாள்? இந்தத் தெருக்கோடியில் அஹமத் பாய் இருக்கிறான். அபாரமாக கஜல் பாடுவான். அவனுடைய அதிர்ஷ்டம் அவன் மனைவி கூட அவன் பாட்டைக் கேட்க அமருவதில்லை.

இன்று காலை எழுந்திருக்கும் போது இன்றைக்கு மூட்டையைத் தூக்கிக் கொண்டு எங்கே போவது என்று அலுப்பாக இருந்தது.

''இன்னிக்கு வெளியிலே போகணும் போல இல்லே மீரா'' என்றான்.

''நம்ம தெருவிலேயே போடலாம்'' என்றாள் அவள் சாதாரணமாக.

அவன் சிரித்துக் கொண்டே எழுந்தான். பொம்மைகளைப் பெட்டியில் வைக்க அவளுக்கு மனசாகாது.

காலை ஆகாரத்தை முடித்துக் கொண்டு அவர்கள் கிளம்பினார்கள். தெரு முனையை அடையும் போது மறுபடி அந்த ஜீப் வந்து நின்றது. வெள்ளைச் சராய்கள் இறங்கின. அவன் கலவரத்துடன் நின்றான்.

''ராம்சிங்! உன்னைத் தேடிக்கிட்டு தான் வந்திருக்கோம்'' என்றார் அன்று வந்த ஆபீஸர்.

அவன் கேள்விக்குறியுடன் அவரைப் பார்த்தான்.

அவனைப் பார்த்து அவர் அகலமாகப் புன்னகைத்தார்.

''உன்னைப் பெரிய அதிர்ஷ்டம் தேடி வருது ராம்சிங்! உன் ஆட்டத்தைப் பார்த்து எங்க அதிகாரி சொக்கிப் போயிட்டார். உன்னை வெளிநாட்டுக்கு அனுப்பப் போறோம்.''

ராம்சிங் திருதிருவென்று விழித்தான்.

''அங்கே பெரிய மேளா நடக்கிறது. நிறைய கலைஞர்களை அனுப்பறோம். நீயும் உன் மனைவியும் போகப் போறீங்க.''

அவன் இன்னும் விழித்தான். வெளிநாட்டுக்குப் போய் என்ன செய்வது என்று புரியவில்லை. தெரு முழுவதும் கூடிவிட்டது. வாயைப் பிளந்து கொண்டு நின்றது.

அவனையும் மீராவையும் ஏற்றிக் கொண்டு அவர்கள் எங்கோ சென்றார்கள். மீராவின் சேலையிலும் தன்னுடைய குர்த்தாவிலும்

இருந்த பொத்தல்களை நினைத்து அவனுக்கு சங்கடமாகயிருந்தது. ஒரு மைதானம் போல் இருந்த ஒரு இடத்துக்குச் சென்றார்கள். அவனைப் போல நிறைய ஜனங்கள் சங்கடப்பட்டுக் கொண்டு அங்கு இருந்தார்கள். ஒரு குரங்காட்டியும் உட்கார்ந்திருந்தான் தன் குரங்குடன்.

ஒரு அதிகாரியோ மந்திரியோ சுற்றிச் சுற்றி வந்து கைகூப் பினார். ''நீங்கள் கலைஞர்கள், இந்த நாட்டுப் பொக்கிஷங்கள்'' என்றார். ''இந்த நாட்டுக் கலைப்பொக்கிஷங்களான உங்களை வெளி நாட்டில் நடக்கும் இந்திய விழாவுக்கு அனுப்பப்போகிறோம். விமானத்தில் செல்வீர்கள். அங்கு உங்களுக்குத் தங்க வசதி செய்வோம். வெளிநாட்டவருக்கு உங்கள் வித்தைகளைக் காண்பித்து நமது நாட்டின் பெருமையை ஸ்தாபிப்பீர்கள்.''

''இவர் பேசறது உனக்குப் புரியுதா?'' என்றாள் மீரா மெல்ல.

அவன் உதட்டைப் பிதுக்கினான். அன்று மாலை வரை எல்லாரும் வெய்யிலில் உட்கார வேண்டியிருந்தது. யார் யாரோ என்னென்னவோ கேள்விகள் கேட்டார்கள். எழுதிக் கொண்டார்கள். இடையில் எல்லாருக்கும் சோமாசாவும் தேநீரும் வழங்கப்பட்டது, குரங்குக்கும் உட்பட.

''இன்னும் பதினைந்து நாட்களில் கிளம்பவேண்டும். தயாராக இருங்கள்'' என்றார் அதிகாரி.

அவன் தயக்கத்துடன் ஒரு அதிகாரியிடம் சென்றான்.

''எங்களை விட்டுருங்க சாப்'' என்றான். ''நாங்க போக முடியாது.''

''ஏன்?'' என்றார் அவர் விறைப்பாக. ''வெளிநாட்டுக்குப் போகக் கசக்குதா? ஒரு டிக்கெட் இருபதினாயிரம் ரூபாய் தெரியுமா? உங்களுக்கு எவ்வளவு பெரிய கௌரவம் அளிக்குது அரசு...!''

''அது சரி சாப்-எங்களுக்கு சௌர்கயப் படாது...''

''ஏன் என்ன விஷயம்?''

''பொத்தலில்லாம ஒரு உடுப்புக் கூட இல்லே சாப். புதுசு வாங்கப் பணமில்லே.''

ஒரு விநாடி அவனை உற்றுப் பார்த்து அவர் சிரித்தார்.

''நல்ல பித்துக்குளி நீ. இத்தனைப் பெரிய அதிர்ஷ்டத்தை வேண்டாம்பாங்களா? போ, கடன் வாங்கி இரண்டு உடுப்பைத் தெச்சுக்க. வெளி நாட்டிலே கிடைக்கிற சம்பாத்தியத்திலே நீ திரும்பி வந்து ஒரு வீட்டையே வாங்கலாம்!''

இருட்டிய பிறகுதான் வீடு வந்து சேர முடிந்தது.

இரவு அஹமத் பாயின் வீட்டுக்குச் சென்று தன் குழப்பத்தைத் தெரிவித்த போது அஹமத் பாய் சந்தோஷத்துடன் அவனை அணைத்துக் கொண்டான்.

''இது பெரிய அதிர்ஷ்டம்தான் ராம்சிங் தாதா. இதை நழுவவிடக் கூடாது. கடன் நா வாங்கித்தரேன். ஜோராக ஆளுக்கு இரண்டு உடுப்புத் தெச்சுக்கிட்டுப் போங்க'' என்றான்.

எத்தனைத் தொலைவு போக வேண்டும் என்று புரியவில்லை. மீரா முதலில் குழம்பினாள். பிறகு மற்றவர்கள் காட்டிய உற்சாகம் அவளைத் தொற்றிக் கொண்டது. பொம்மைகளின் உடைகளைப் பார்த்துப் பார்த்து சரி செய்தாள். ''வெளிநாடு போறிங்களா?'' என்று கொஞ்சினாள்.

அஹமத் பாய் ஐநூறு ரூபாய்க்கு ஏற்பாடு செய்து கொடுத்துக் கடைக்கும் அழைத்துப்போய் இரண்டு பேருக்கும் உடுப்புக்கள் வாங்கிக் கொடுத்தான்.

ராம்ஸிங் தாதா அமெரிக்கா போகிறான் என்று தெருவே திமிலோகப்பட்டது. இது நல்லதிற்கா கெடுதலுக்கா என்று புரியாத

திகைப்பில் அவன் இருந்தது போலவே மீராவும் இருப்பதாகத் தோன்றிற்று.

பிறகு நடந்தது எல்லாமே கனவுதான். எப்படி விமானத்தில் ஏறினோம், எப்படி இந்த இந்திரபுரிக்கு வந்து சேர்ந்தோம் என்ற திகைப்பு இரண்டு நாட்களுக்கு இருந்தது. பிறகு புதிய புதிய அனுபவங்கள் புதியபுதிய திகைப்பை ஏற்படுத்தின. தில்லியைவிடப் பெரிய நகரம் இது. வானைத் தொட்டுக் கொண்டு நின்ற கட்டிடங் களை அண்ணாந்து பார்ப்பதே சிரமமாக இருந்தது. மிகப் பெரிய வளாகத்தில் கூடாரங்கள் கட்டிக் கொடுத்திருந்தார்கள். இரவில் குளிர் நடுக்கிற்று. டோலக்கைத் தட்டி கம்பீரமாகப்பாடும் மீராவுக்கு இரண்டாம் நாளே குரல் கட்டிக் கொண்டது. நவீன கழிவறைகள் பழக்கமில்லாததால் அவனைப் போல இன்னும் பல பேர் இரவில் வெட்ட வெளியில் எங்காவது மலம் கழித்துத் திருட்டுத்தனமாக கூடாரத்துக்குள் பதுங்கிக் கொண்டார்கள். மறுநாள் எல்லாரும் பொதுவாக இந்திய அதிகாரிகளிடமிருந்து திட்டு வாங்கினார்கள். கண்ட கண்ட வேளையில் தூக்கம் வந்தது. வந்த போது தூங்க முடியாமல் ராம கதை சொல்லும் போது அசத்திற்று.

சாரி சாரியாக வெள்ளைக்காரர்கள் போட்டோ பிடித்தார்கள். திரும்பிய இடமெல்லாம், இந்தியர்கள் கரணம் போட்டார்கள், கரகம் ஆடினார்கள், கழக்கூத்தாடினார்கள், சிலம்பம் ஆடினார்கள். குரங்கு குட்டிக்கரணம் போட்டது. வெள்ளைக்காரக் குழந்தைகள் கைக்கொட்டிச் சிரித்தார்கள்.

ராம கதையின் விளக்கம் கேட்டார்கள். இந்திய அதிகாரி விளக்கிக் கொண்டு போனார். ராம்சிங்கின் கற்பனை தடைபட்டது. சீதையும் ராமனும் சோர்ந்து நின்றார்கள். மீராவின் டோலக்கிலும் ஏதும் உற்சாகத்தைக் காணோம்.

''என்ன ஆயிட்டது உனக்கு?'' என்றான் அவன்.

''உனக்கு என்ன ஆச்சு?'' என்று அவள் திருப்பிக் கேட்டாள். ''நம்ம பாட்டு யாருக்கும் புரிஞ்சாத்தானே நமக்கு உற்சாகம் வரும்?''

கூட்டம் தொடர்ந்து நின்று பார்க்கவில்லை. ராவணன் தூக்கிக் கொண்டு போன சீதை திரும்பி வந்தாளா என்று யாரும் கவலைப்படவில்லை. ஒவ்வொன்றுக்கும் இத்தன நிமிஷம் என்று ஒதுக்கி வைத்தாற் போல் நகர்ந்தார்கள்.

''அந்தக் குரங்கைப் பார்க்கிற மாதிரி தான் நம்ம பொம்மை களையும் பார்க்கிறாங்க'' என்றாள் மீரா.

''நாம போடறதும் குரங்காட்டம் தான்'' என்றான் அவன். வெள்ளைத் தோலைப் பார்த்து அவனுக்கு அலுத்து விட்டது. கிளம்பு வதற்கு முன் சக்கரையாகப் பேசிய அதிகாரிகள் இங்கு விடுவிடு வென்றார்கள். காண்பிக்கும் நிகழ்ச்சிக்கெல்லாம் யாரும் காசு ஒன்றும் கொடுத்துவிடவில்லை.

அதிகாரிகள் தான் வெள்ளையர்களுடன் உற்சாகமாக வளைய வந்தார்கள். 'இதைப் பாருங்கள் அதைப் பாருங்கள்' என்று சுட்டிக் காட்டினார்கள். ராம கதை நடக்கும்போது, 'அரிச்சந்திரன் போடு' என்பார்கள். 'எப்படி சாப்?' என்றால் 'அடப் போடு, இவங்களுக்கு இப்ப அது வேணும்' என்றார்கள். அவனுக்கு எரிச்சல் வந்தது. தில்லியாக இருந்தால் 'உங்க இஷ்டப்படி என்னாலே ஆட முடியாது சாப்' என்று கும்பிடு போட்டு மூட்டையைக் கட்டியிருக்கலாம். பல்லைக் கடித்துக் கொண்டு ஒரு மாதத்தைக் கழிப்பதற்குள் மீராவுக்குக் குளிர் தாங்காமல் இருமல் பிடித்துக் கொண்டது.

போகும் போது கூடவந்த அதிகாரிகள் திரும்பும் போது காணோம். இப்போது வந்தவர்கள் யாரோ புதிது. ஊரை நோக்கிப் பயணம் துவங்கியதுமே ராம்சிங்கிற்குப் புதிய கவலைப் பிடித்துக் கொண்டது. ஐநூறு ரூபாய் கடனை எப்படி அடைக்கப் போகிறோம்? யாரிடமும் எதுவும் கேட்கவே பயமாக இருந்தது. அதிகாரிகள்

எல்லாரிடமும் நன்றியை எதிர்பார்த்த மாதிரி இருந்தது. எதற்கு நன்றி என்று அவன் குழம்பினான்.

விமானம் நள்ளிரவில் வந்து சந்தைக் கூட்டமாய் இறங்கி அவர்கள் வீட்டிற்குப் போய் சேரும்போது வானத்தில் சாம்பல் பூத்திருந்தது.

வீட்டைப் பார்த்ததும் சற்றும் எதிர்பாராமல் மீரா அழ ஆரம்பித்தாள். அவனுக்கும் அழ வேண்டும் போல் இருந்தது. ''போயிட்டுப் போறது அழாதே'' என்றான் அவன் சமாதானமாக.

''எப்படி இருந்தது எப்படி இருந்தது'' என்ற கேள்விக்குச் சட்டென்று பதில் சொல்லத் தெரியாமல் திகைப்பு ஏற்பட்டது. ''ஒண்ணும் சொகமில்லே'' என்று அவன் தலையை அசைத்ததும் எல்லாரும் வினோதமாகப் பார்த்தார்கள்.

''எத்தனைக்காசு சம்பாதிச்சே தாதா?'' என்றார்கள்.

''ஒண்ணுமேயில்லே'' என்று அவன் கையை விரித்தபோது அவர்கள் கண்ணில் சந்தேகம் நிழலாடுவதைக் கண்டு அவனுக்கு வேதனையாக இருந்தது. அஹமது பாயைப் பார்க்கவே கூச்சமாக இருந்தது.

''எங்கிட்ட நிச்சயமா காசு இல்லே அஹமத் பாய். நா எப்படிக் கடனைத் திருப்பப் போறேன்?''

அஹமத் பாய் முதுகைத் தட்டிக் கொடுத்தான்.

''நாளைக்கு அந்த ஆபீஸரையே போய் கேட்போம், ஏதாவது வழி செய்யுங்கன்னு'' என்றான்.

மறுநாள் காலை இருவரும் கிளம்பி அலுவலகத்தை அடையும் போது உச்சி வெயில் ஏறிவிட்டது. எந்த ஆபீசரையும் காணோம்.

வெற்றிலையைக் குதப்பிக் கொண்டு குமாஸ்தா நிதானமாக பதில் சொன்னார்.

''இரண்டு ஆபீசர் லீவு இன்னிக்கு. உங்களுக்கு என்ன வேணும்?''

அஹமத் பாய் ராம்சிங்தாதாவுக்கு இருக்கும் கடனைப் பற்றிச் சொன்னான்.

''அதுக்கு அரசு என்ன பண்ணும்னு எதிர்பார்க்கறீங்க?''

அவனே அரசு என்று பட்டது.

''சன்மானம்னு ஏதாவது கிடைச்சா ஈடுகட்டலாம்!''

''சரிதான். உங்களுக்கெல்லாம் இடத்தைக் குடுத்தா மடத்தைப் புடுங்குவீங்க!'' என்றார் குமாஸ்தா.

''ஏன்யா இத்தனை செலவழிச்சு உன்னையும் உன் பெண் ஜாதியையும் அரசாங்கம் வெளிநாட்டுக்கு அனுப்பியிருக்கு, ஒரு மாசம் சாப்பாடு போட்டிருக்கு! அவனவன் வெளிநாட்டுக்குப் போகணும்னு ஆலாய் பறக்கறான். நீ நினைச்சுப் பார்க்காமலே அது கிடைச்சுதா இல்லையா? அதுக்கு நன்றி வேணாம்?''

ராம்சிங் தாதா குழப்பத்துடன் நின்றான். நிஜமாகவே தான் ரொம்பவும் அல்பமாகிப் போனதுபோல் இருந்தது.

''அதெல்லாம் சரிதான்'' என்றான் அஹமது பாய்.

''இவருடைய பொம்மலாட்ட ஷோவை எங்கேயாவது ஏற்பாடு பண்ணி காசு கொடுத்தாங்கன்னா கடனை சமாளிக்கலாம்.''

''ஏன்யா, உன்னைமாதிரி எத்தனை ஆள் வருவான்! எல்லாத்தையும் அரசாங்கம் சமாளிக்க முடியுமா? உன் சொந்தக் கடனை நீயே அடைச்சுக்க வேண்டியதுதான்.''

என்ன விஷயம் என்று இன்னொரு குமாஸ்தா கேட்டார்.

ராமசிங்கும் அஹமத் பாயும் வெளியே நடந்தார்கள்.

''இவங்க பேராசையைப் பார்த்தியோ'' என்று குமாஸ்தா சொல்வது கேட்டது.

ராம்சிங்கும் அஹமத் பாயும் வெகு நேரம் தங்களுக்குள் மூழ்கிய யோசனையுடன் நடந்தார்கள்.

''கடனை எப்படித் தீர்க்கப் போறேன் அஹமத் பாய்?''

''அதுக்கு ஒரு வழி இருக்கு.''

''என்ன வழி?''

''அதைப் பத்தி நினைக்கவே கூடாது.''

''கடன்காரன் மறப்பானா?''

''மறக்கல்லேன்னா அவனாலே என்ன தான் செய்ய முடியும் சொல்லு? தொந்திரவு செய்தான்னா நீ போற ஏதாவது ஒரு கிராமத்திலே டேரா போட்டுடு அவ்வளவுதான். இப்போதைக்குக் கடனை மறந்துரு. இன்னிக்கு ராத்திரி உன் வீட்டுக்கு வந்து கஜல் பாடறேன்!''

ராம்சிங் அவனை நிமிர்ந்து பார்த்தான். அஹமத் பாய் இரவு வேளையில் கஜல் பாடுவது இதற்குத்தான் என்று புரிந்தது. தனக்கும் அவனுக்கும் இடையே இப்பொழுது ஒரு புதிய உறவு வலுப் பட்டிருப்பது போல் தோன்றிற்று.

